உ

கடவுள் துணை.

# உஷா பரிணயம்

அல்லது

## பாணாசூரன் கர்வபங்கம்.




இஃது

ஆர்சாவூர். வேணுகோபால் பிள்ளை

அவர்களால்

இயற்றப்பட்டதை,

புரசை:

க. போகனசுந்தர முதலியார்

அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,

எழும்பூர் ஸ்ரீ ஆரிய கணேச ஆனந்த சபையாரால்

நடிக்கப்பெற்று

சென்னைப் புரசை

...றன்" அச்சுக்கூடத்திற்

...திப்பிக்கப்பட்டது.

---

1929 [விலை அணா 4.

உ

கடவுள் துணை.

# உஷா பரிணயம்

அல்லது

## பாணாசூரன் கர்வபங்கம்.

இஃது

ஆச்சாலூர் வேணுகோபால் பிள்ளை

அவர்களால்

இயற்றப்பட்டதை

புரசை :

க. மோகனசுந்தர முதலியார்

அவர்களால்

பரிசோதிக்கப்பட்டு

எழும்பூர் ஸ்ரீ ஆரிய கணேச ஆனந்த சபையாரால்

நடிக்கப்பெற்று

சென்னைப் புரசை :

"மாறன்" அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



காபிரைட் ரிஜிஸ்டர்.] 1929 [விலை அணா 4.

# ரெஜிஸ்தர் அறிவிப்பு.

இதனால் சக்லமானவர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால் ஆச்சாலூர் வேணுகோபால் பிள்ளை அவர்களால் எழுதப்பட்ட உஷா பரிணயம் அல்லது பாணாசூரன் கர்வபங்க மென்னும் இந்த புத்தகத்தின் சகல சுதந்தரமும் மேற்படியாரிடமிருந்து பெற்றுக்கொண்டபடியால் இந்த புஸ்தகத்தை என்னுடைய உத்தரவன்றி யாரும் அச்சிடக்கூடாது. அப்படி மீறி அச்சிடுவரேல் கவர்ன்மெண்ட் சட்டப்படி சகல நஷ்டத்திற்கும் உள்ளாவார்களென்று இதனால் அறிவிக்கப் படுகிறது,

இப்படிக்கு:

க. மோஹனசுந்தர முதலியார்,

புரசை, சென்னை.

## நாடக பாத்திரர்கள்.

| | | |
|---|---|---|
| கதை நிகழு மிடம் | .... .... | சோணிதபுரம் |
| பாணாசூரன் | .... .... | சோணிதபுரத்தரசன் |
| கும்பாண்டன்<br>காலநாபன் | } .... | அமைச்சர்கள் |
| நாரதர் | .... .... | ஓர் மஹரிஷி |
| பரமன் | .... .... | கைலைக்கதிபதி |
| உஷை | .... .... | பாணன் மகள் |
| செங்கமலம் | .... .... | சேடி |
| காளி | .... .... | ஓர் துஷ்டதேவதை |
| சித்ரரேகா | .... .... | உஷையின் அந்தரங்க தோழி |
| அனிருத்திரன் | .... .... | கிருஷ்ண பரமாத்மாவின் பவுத்திரன் |
| சுப்பன்<br>வீரன் | } .... | கொலையாளிகள் |
| கிருஷ்ணன் | .... .... | துவாரகபுரிவாசன் |
| ராதா<br>ருக்மணி | } .... | கிருஷ்ண பரமாத்மாவின் மனைவிகள் |

உ

கடவுள் துணை.

# உஷா பரிணயம்

அல்லது

## பாணாசூரன் கர்வபங்கம்.

ஆக்ட் 1.] பாணாசூரன் தர்பார். [சீன் 1.

என்னகர் செழித்துவாழ்க எனது செங்கோலும் வாழ்க
நன்னெறி மறையோர் வாழ்க நாட்டினில் குடிகள் வாழ்க
திண்ணமாய் குருவும் வாழ்க திகழொளி மாரிபெய்து
வண்ணமாப் திசையனைத்தும் வாகுடன் வாழ்க வாழ்க.

(பாணன் வசனம்.) மந்ரி, நமது நாட்டிலுள்ள வீரர்களும் மற்றுமுள்ள அரசர்களும் க்ஷேமமா?

(மந்ரி வ-ம்.) அவனிக்கதிபதியாகிய அரசரே தங்கள்சமுகத்தில் எத்தனையோ அரசர்கள் கிடுகிடுத்து விலிர்விலிர்த்து எதிர்வர பயப்படுகிறார்கள். மற்றுமுள்ள நமது வீரர்கள் மாத்திரம் க்ஷேமந்தான்.

(பாணன் வசனம்.)- சபாஷ் சபாஷ், அவ்வளவு பயமில்லாவிட்டால் பின்னல் நம்மை நகைக்கமாட்டார்களா? என்னைக் கண்டால் கிடுகிடென்று நடுங்கவேண்டாமா?

மத்யமாவதி ஆதிதாளம்.

பார்க்கோர் நவகண்ட பகிரண்டன்—மிகு
துஷ்டர்களின் இஷ்டருட அஷ்டதிக்கும் வணங்கிடும் (பார்)

அநுபல்லவி.

சீர்கொண்ட சத்யலோக—வலம்புரி விளங்குமாலே
வேந்தர்கள் எல்லாம் வந்து வீழ்ந்து தாழ்ந்து என்னடி வணங்க

சரணம்.

கூர்கொண்ட வாள்வேல் கொளாமல்
எவரையும் வெல்வேன்
கார்கொண்ட சிங்கங்களை கொய்வேன்
கரத்தில் பிசைப்பேன்
மதங்கொண்ட மிருகங்களை வதைப்பேன்—வரிசையாக
உண்டோ எனக்கு நிகர் இவ்வுலகம் தன்னிலே
கண்ட சப்தவேதி மண்டலமும் நடுங்க
கொண்ட கருமப்படி கொலைக்கு பயப்படேன்
கும்புசேர் அசுரர்புகழ் எத்தலம் வணங்கும் பாணன் (பார்)

## தேசவிசாரணை.

பாணன் பாட்டு. (கலிலோ)

ஆலயபூஜைகள் அனுதினம் குறைவின்றி நடக்கின்றதா
எனது மந்திரி (ஆல)

ஆறுகால பூஜைகள் தவறாமல் அட்டின்றி நடக்கின்றதா
எனது மந்திரி (ஆலய)

(பா வ-ம்,) மந்திரி நமது நாட்டில் இருக்கும்படியான ப்ரம்ம ஆலயம் விஷ்ணு ஆலயம் சிவாலயம் இன்னமிருக்கப்பட்ட தேவாலயங்களும் பிராம்மணரால் பூஜை தவறாது நடந்தேறி வருகின்றதா?

(மந்ரி வ-ம்.) அரசே நமது தேசத்திலிருக்கும் ப்ரம்ம ஆலயம் விஷ்ணு ஆலயம் சிவாலயம் இன்னம் இருக்கப்பட்ட தேவாலயங்களுக்கெல்லாம் ப்ராம்மணரால் தவறாது பூஜைநடந்தேறி வருகின்றது.

பாணன் பாட்டு :— (பஹாரியாலா என்ற வர்ணம்)

பல்லவி.

மாதமும்மாரி முறைப்படி பெய்கின்றதா ?

அனுபல்லவி.

ஆகரீர்கருதும் சுத்தபாகமெப்படி
அதையும்கேட்க ஆசைமிகதோணுதே மந்திரி
என்முன் சொல்வாய் மந்திரி.

(பா வ-ம்). மந்திரி! நமது நாட்டில் மாத மும்மாரி பொழிந்து வேளாண்மை குறைவில்லாமல் நடந்துவருகின்றதா. அன்னதாண சத்திரங்களிலும் ஏழை எளியவர்களுக்கும் குறைவின்றி நடக்குதா?

(மந்ரி வ-ம்). ப்ரபூ! எத்திசையிலும் கீர்த்திவாய்ந்த வேந்தலே! தெய்வபக்தி, நிறைந்த இடத்தில் மழைகளுக்கென்ன குறை! ஏழை எளியவர்கட்கு என்ன கஷ்டம்! எங்கிருந்து உண்டாகப்போகிறது.

பாணன் பாட்டு. (கபரதாஹார்)

பல்லவி.

காவலர் கப்பம்—கனிவுடன் செலுத்துராரா (காவ)

அனுபல்லவி.

சாலவே அனுகூலமாபல
சாஸ்த்ரமாம் சார நால்வகைச்சேனைகள்
கோரிய காரிய லாப விசேடண
கூறிய விக்ரம க்ஷத்ரியரெப்படி (காவ)

(பா வ-ம்), நமக்கு கீழடங்கிய சிற்றரசர்கள் யாவரும் திரைப் பணங்கள் ஜாக்கிறதையாக கட்டி வருவதோடும் கூட க்ஷத்ரியர்களும், சாஸ்திரவிதிப்படி யுத்தப் பயிற்சிகளில் பயின்று வருகின்றார்களா?

(மந்ரி-வ-ம்.) அரசே! திரைப்பணங்கள் கட்டுவதோடுங்கூட க்ஷத்ரியர்களும் யுத்தப்பயிற்சியும் பயின்றுவருகின்றார்கள் ப்ரபு.

## ரோட் ஸீன்.

நாரதர் பாட்டு. (சோமசுந்தரனே என்ற வர்ணம்)

பல்லவி.

ராம மந்திரமே—தினம்
நாடித் துதித் தாடு நெஞ்சமே. (ராம)

சரணம்.

காமனை பயின்ற மந்திரம்
காருண்ய முடைய மந்திரம்
ஆமையுருவான மந்திரம்
யாரும் கோரும் தாரக மந்திரம் (ராம!

மாமகிமை வாய்ந்த மந்திரம்
மற்றது புவியோர் தந்திரம்
எமனணு காத மந்திரம்
இஷ்டம்சேர்அஷ் டாக்ஷரமந்திரம் (ராம)

நாரதர்—வசனம்.

ஹே! பரமாத்மா பரமாத்மா! நல்ல வேளை. நான் இன்று காலை எழுந்திருக்கும்போதே, உளம்பூரிற்று. அதற்கேற்றவாறு நான் இன்று தேவேந்திரனிடம் சென்று அங்குள்ள வைபவங்களைக் கண்டு ஆனந்தித்தேன், இதினிடையே நல்ல வேளைக்கு ஓர் கலகம் கிடைக்க வில்லையே என்று ஏக்கமுற்றிருந்தேன், நல்ல வேளையாய் ஒரு யுக்தி தோன்றி வைகுண்டம்கிளம்பி மஹாவிஷ்ணுவை தரிசித்து அங்குள்ள வைபவங்களைக்கண்டு, அங்கும் சரியான கலகம் கிடைக்காமையால் கைலாயனிடம் சென்றால் கலகம் அகப்படுமென்று சென்றும் பயன் படாது, கர்த்தனை நோக்கி கஷ்டமடையும் சமையத்தில் ஓர் யுக்தி அகப்பட்டது. அதாவது பாணாசூரன் சிவனுடைய வரத்தால் மிக்க கர்வங் கொண்டிருக்கிறான், அவனை தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்கலாம். இதுதான் தகுந்த யுக்தி.

சேவகன் வசனம்:—மண்டலாதிபா நாரதர் வருகின்றார்,

பாணன்:—அப்படியா வரட்டும்.

(பா வ-ம்.) நாரதரே வரவேணும் (ஆசனத்தில் அமர்வீர்).

பாணன் பாட்டு—கல்யாணி ரூபகம்.

பல்லவி.

நாரதரே வாரும் ஏது—நமதுயிடம் நாடியது.

அநுபல்லவி.

பூதலத்தில் என்ன சேதி—போதகரே உரை செய்வீர். (நா

சரணம்.

எங்கெங்கு சென்று நீரும் ஏதேது விசேஷங்கண்டீர்
சங்கை வையாமல் சொல்வீர் சாமியே தயாநிதியே (நார)

(பா வ-ம்,) நாரதரே ஏது இவ்வளவு தூரம் வந்துவிட்டீர்கள். நம்மீது இவ்வளவு தயவு வந்தது ஆச்சரியமாக இருக்கிறது.

(நாரதர் வ-ம்). பாணு நீ சிவபெருமானிடம் யாதோ வரம்பெற்ற தாக கேள்வியுற்றேன். அதனால் உனக்கும் எனக்கும் அனுகூலம் ஏற் பட்டது. அதை தெரிந்துபோவதற்காகவே இவ்விடம் ஓடோடி வந் தேன். ஆ! ஆ! உன்னை தேவலோகத்திலும் புகழ்கிறார்கள். போகட் டும். பாணு நீ க்ஷேமந்தானு?

(பாணன் வ-ம்). க்ஷேமந்தான் முனிவரே! சிவபெருமானிடம் வரம் வாங்கினது உண்மை. நீர் சொல்லியவாறுபோல் என்னை தேவ லோகத்தில் மெச்சுவதற்கு என்ன தடை. போகட்டும் என் சமானம்

இராகம் அடாணு. தாளம் ஆதி.

யாராகிலும் உண்டா—நாரதரே
எந்தனிடம் போர் புரிய (யா)

அனுபல்லவி.

வானத்தைபிடித்து மண்டலங்களைப் பிளந்து
வாய்மை பேசுவோரை தூள் தூளாக்குவேன் (யா)

சரணம்.

கானகத்தில் வாழரக்கர் சேதிசற்று ஓர்கிலார்
ஊனருக்கும் வாளெடுத்து நானெடுதது வீசினின்
ஓர்நொடிக்குள் மாமிசத்தை யேபுசித்து மீளுவன்
வானகத்தில் நாகமுற்ற பாதலத்தில் ஓடினும்
வாழவிட்டிடேன் விடிற்பில் எவரெனக்கு சமானம் (யா)

(பாணன் வ-ம்.) நாரதரே முன் பிறப்பின் தவத்தினால் நல்லானை பூஜித்தேன். பூஜித்தும் பலனில்லை. அதற்குத் தக்கவாறு இரை வேண்டுமே என்று எக்கம் கொண்டிருக்கும் சமயம் நல்ல வேளையாய் நீங்கள் வந்து சேர்ந்தீர்கள். என்னிடம் போர் புரிபவர்கள் இப்புவியில் உண்டா? அப்படி உண்டானால் தெரிவியும்,

(நாரதர் வ-ம்,) உண்டு. உண்டு.................................ஆனால்

(பாணன் வ-ம்.) என்ன நாரதரே ஆனல் என்று யோசிக்கின்றீர்,

(நாரதர் வ-ம்). ஒன்றுமில்லை. பெருமான்கொடுத்த வரத்தை பே தித்து பரிக்ஷிக்க எவனாவது உம்மிடம் வந்தானு என்கிற சந்தேகம்.

(பாணன் வசனம்). இல்லை. இல்லை.

(நாரதர் வசனம்.) குண்டலியினுள்ளே குறித்தரனைச் சிந்தித்து மண்டலங்கள் மேலாகப் பார் என்றபடி யாரை யார் நம்புவது.

(பாணன் வ-ம்,) வாஸ்தவம் நாரதரே நாட்டமில்லாவிடம் நாட்ட மறிந்தபின் மீட்டுவிடாது சிவம் என்றபடி ஓர் உபாயம் சொல்லும்.

நாரதர் பாட்டு.

(சுயராஜ்யம் அதிதூரமில்லை என்ற மெட்டு)

பாணு உனக்கு பரிவுடனே நான்
பதில் அளிப்பேன் கேட்பாய் நீயே
வாணளை வீண் நாளாய் கழித்தே
ஏனோ கவலை கொள்கின்றாய் பழித்தே (பாணு)

2. அன்பாய் இருக்கும் அரன் தனை மறவாமல்
உன்பால் பிடித்து உன் சந்தேகம் தீர்
தன்பாலறியும் தவமுடையோர்கள்
என் நாளிலுமே உமக்கிசைவார்கள். (பாணு)

(நாரதர் வ-ம்). பாணு. என் புத்திக்கு எட்டினவரையில் ஒன்றும் புலப்படவில்லை. ஆனால் ஒன்று தெரிவிக்கிறேன் கேள். தன்பாலறியும் தவமுடையோர் நெஞ்சகத்துள் அன்பாயிருக்கும் அரனையே பிடித்துக்கொள். அப்பால் உன் சந்தேகம் நிவர்த்தியாய் விடுகிறது.

(பாணன் வ-ம்), பேஷ் பேஷ் நாரதரே! நல்ல யோசனை, இதோ புறப்படுகிறேன். நீங்கள் சென்று வாருங்கள்.

(நாரதர் செல்லுதல்)

---

## சீன் 2. கைலாயம். ஆக்ட் 1.

பாணன் விருத்தம் (மத்யமாவதி)

நின்னையே நோக்கி விடாதகட்புலனு
நின்னையே நினைக்கு நெஞ்சகமு
நின்னையே துதிக்கு நாவுமென்றருளி
நின் திருவடியின் வைத்தருள்வாய்
தன்னையே நினர்க்குச் செகமெலாங் காட்டுந்
தரணியோ டிகலிமே வினர்க்குத்
தன்னையே காட்டு மலையெனுஞ் சோண
சைலனே கைலை நாயகனே.

பாணன் பாட்டு. (அடாணு ரூபகம்)

பல்லவி.

வந்தேன் வரம் பெற்ற உனது மைந்தன்
அதிதீவிரமாகவே உம்மை நான் தேடியே (வந்)

அநுபல்லவி.

விண்ணுடர்கள் கண்டால் அதிரும்படி
விருதிக்கொடி விஜயக்கொடி வரமே பெற்றிட (வந்)

பாணன் வசனம்.

சிவபெருமானே தாங்கள் தந்த வரத்தின் மகிமையை பரிசோதிக்க இத்தனை நாளாய் காத்திருந்தும் என்னுடன் போர் புரிய ஒருவனும் வந்தானில்லை. ஆகையால் உம்முடைய வரத்தின் மகிமையை அரிய, உம்மிடமே போர்புரிந்து என் சந்தேகத்தை நிவர்த்தி செய்துக்கொள்ள வந்திருக்கிறேன். உம்முடைய அபிப்ராயம் எப்படி.

சிவபெருமான் தரு. (ஷை வர்ணமெட்டு.)

பாணு வீணில் ஏனோ கர்வங்கொண்டாய்
இந்த எண்ணம் சரியல்ல (பாணு)

அநுபல்லவி.

நானே சொல்லும் புத்தியை நாடு
வீணே ஏனோ என்னிடம் வாது (பாணு)

சரணம்.

எந்தனை எதிர்த்து போர்புரியவே நீ
ஏனோ எண்ணங் கொண்டாய்
என்னிடம் வாதுகள் செய்யத்தகாது நீ
இயம்புவேன் நீ கேட்பாய்
விண்ணுடர்கள் கண்டு நகைக்கவே
விஜயக்கொடியதைபிடித்து வருவானொருவனுனக்கு (பாணு)

பாணன் ஷை சரணம்.

உம்மோடெதிர்த்து நான் என் சங்கை தீரவே
உம்மை நாடி வந்தேன்—என்
தோள்நமை யுற்றதால் உம்மிடம் தேடி
தினவைபோக்க வந்தேன்
சந்தேகமறவே எந்தன் முன்னே
உந்தன் வீரமதனையே வன்மையாய் நான் பார்த்திடவே (வந்)

(சிவபெருமான் வ-ம்), பாணு! உனக்கேன் யிப்பேர்பட்ட விபரீத புத்தி ஏற்பட்டது. நான் கொடுத்த வரத்தை என்னிடமா காட்டுவது. நன்கல்ல. உனக்கு தகுந்த பலசாலி வருவான் பயப்படாதே. நீ அவனிடம் உன்தோள் தினவை தீர்த்துக்கொள்—சென்றுவா.

(பாணன் வசனம்). அவவனெப்போது வருவான். அவன் வருவது எனக்கெப்படித் தெரியும்.

(சிவபெரு—வ-ம்). அவன் போர்புரிய வரும்போது உன்னுடைய கோட்டைமணி அடிக்கும். ரணபேரிகை முழங்கும். அதில் தெரிந்துகொள்.

(பாணன் வசனம்). அப்படியா சரி! அப்படி அவன் வருவதாயிருந்தால் என் கோட்டைக்கு காவலிருக்கவேண்டும் தெரியுமா?

சிவபெருமான் வ-ம்), அப்படியே ஆகட்டும்.

பாணன் பாட்டு,

(நானே நல்ல நாளடி என்ற வர்ணமெட்டு)

பல்லவி.

நானே ஜெயம் பெருவேன்—இந்
நர்ளே ஜெயம் பெறுவேன்

அனுபல்லவி.

புவியில் எந்தனைவிட போரில் தேர்ந்தவரேது
நொடியில் கண்டபோதே கண்டதுண்டமாக்கிடுவேன்
அதிவீரராளுலும் எனை கண்டு வணங்கிட
ஆட்டுவேன் பம்பரம்போல் வாட்டுவேன் வீரமுடன் (நா)

---

## ஆக்ட் 2. நந்தவனம். சீன் 1.

உஷை பாட்டு—ப்யாக் ஆதி.

சர்வநிதியில் தாரைகளெல்லாம்
தடாகத்திலிருந்து தளர்ந்த மொழியால்
பிரிய சேடிகளே ஜலக்ரீடை யாடுவோம்
வேகமாய் என் பின்னே வருவீர் சேடிகாள்

(உஷை வ-ம்.) சேடி! தடாகத்தில் தாமரைமலர்கள் மலர்ந்திருக்கிறது எவ்வளவு அழகாய் இருக்கிறது பார்த்தனையா? சந்திரன் இருப்பிடமிருந்து பூரித்து சந்தோஷமாய் குளிர்ந்த பார்வையாய் என்னையே பார்ப்பதைப்போல் இருக்கிறதடி.

(சேடி வ-ம்.) ஆம் ஆம் அம்மா! அப்படித்தானிருக்கிறது.

ஷை உஷை பாட்டு.

அரண்களிலிருந்து நறுமணம் வீசுற
அருகினிலே சென்று பூக்களை கொய்வோம்
அடிமேல் அடிவைத்து அன்னங்கள் ஜோடியாய்
ஆடும் உன்னதத்தை அன்புடன் பார்ப்பாய் (சர்வ

(உஷை வ-ம்.) சேடி இந்த அன்னத்தின் ஒய்யாரத்தை பாரடி.

(ஒரு கையால் குடை பிடிப்பேனே என்ற வர்ணம்.)

உஷை பாட்டு.

சேடிகளே என்பின் வருவீர்—சேகரித்து புஷ்பம் தருவீர்
நாடி நம் பூஜைக்கு கொணர்வீர்—நலமாயிதை நீரே உணர்வீர்

ஷை சேடி பாட்டு.

அம்மணி இதோ இங்கிருக்கும் அடுக்குமல்லி மணந்திருக்கும்
மல்லிகையும் மணம்கொடுக்கும் மலர்ந்தரோஜா இன்பமளிக்கும்

ஷை உஷை பாட்டு.

என்னடிசேடி செங்கமலா எத்தனை புஷ்பம் நீ பறித்தாய்
போதுமான புஷ்பமளித்தாய் புறப்படலாம் இனிகருத்தாய்

ஷை தோழி பாட்டு.

செல்லுவோமா இனிதாயே—செப்பிடுவீர் இனிநீயே
சென்றறுத்தால் இனிதாயே—செல்வோம் விடையளிப்பாயே

(உஷை வ-ம்). சேடிகாள் இனி செல்லுங்கள். இனி அம்மன் பூஜை செய்ய கோவிலுக்கு செல்லவேண்டும். பூஜையும் முடியவேண்டுமாதையால் நீங்கள் வீடுபோய் சேருங்கள்.

---

இடம் கோவில்] காளி சந்நிதி. [நேரம் மாலை

பல்லவி. (சனிதோடி என்ற வர்ணம்)

பரமேஸ்வரி ஆதரி—பராத்பரியே (பர)

அநுபல்லவி.

சிறமேற்குவித்தேன் யான் கரமேத் கைக்கொண்டே நின்று
அரன் தேவியே என்னை ஆதரிப்பாயே (பர)

வரனைப்பெறவே வரமருள்வாய்நதி (பர)

அருளைப்பெற பணிந்தேன் வரமளித்திட இங்கு (பர)

(உஷை வ-ம்) சடாக்ஷரி பஞ்சாக்ஷரி, மஹேஸ்வரி, நான் எத்தனையோ தினமாய் உன்னை பூஜிததும் எனக்கு தகுந்த நாயகனை பெற அருளாமல் இருப்பது நியாயமா? நான் உன்னைப்போல் பெண்ணல்லவா? என்றைக்கு நின்மனம் இறங்குமோ தாயே.

காளி பிரசன்னம்.

பெண்ணே உஷா உன் பக்திக்கு மெச்சினேன். பயப்படாதே. நீ கோறின புருடனே உன் கனவில் தோணுவான் சென்று வா.

(உஷை வ-ம்). ஆ! என்ன ஆச்சரியம்! தாயே நான்செய்த பாக்யமே பாக்யம்.

---

இடம் சயனறை.] நித்திரை. [காலம் இரவு.

(ஜோதார என்ற வர்ணம்)

பல்லவி.

ஆ! ஆ! நாதா போகாதே அறிவையாள் எனைவிட்டு (ஆ)

அநுபல்லவி.

ஓ! ஓ! என்ன மோசம் செய்தீர் ஒண்டியாய் விடுத்துநீரும் (ஆ)

(உஷை வ-ம்). ஆ! இதென்ன மாய்கை, இத்தனை வகையுடன் இன்பமளித்த காதலர் காணோமே! ஆ! (படுக்கையில் விழுதல்)

உஷை விருத்தம் தங்யாசி.

பல்லார் புகழும் பெருஞ்சிறப்பும் பாக்கியம் பலபடைத்தென்ன
அல்லார் நெஞ்சத்தி லருளகற்றி அன்பினேருருவாய் அதைதிருத்தி
எல்லா நலனும் ஒருங்களிக்க இன்பக்காதல் அடையாரேல்
நல்லாரல்லர் அவரெல்லாம் நாற்காலில்லா விலங்கினமே.

சித்ரரேகை பிராப்தம்.

(சித்ர—வசனம்). ஏனம்மா உஷா. ஓர்விதமுகவாட்டமடைந்திருக்கிருய்? என்ன காரணம்.

(உஷை வசனம்). முகவாட்டத்தை தெரிவித்தால் உன்னுல்ஆகப் போகிறது யாது! நீ வந்த வேலையைப் பார்.

(சித்ர—வசனம்). தாயே என்ன இவ்வாறு மொழிந்தீர்? என்னுல் கூடுமானதைச் செய்கிறேன்.

(உஷை வசனம். அப்படிக்கொன்றுமில்லை.

(சித்ர—வசனம்). யோசிக்காதீர் சொல்லுங்கள்.

(உஷை வசனம்). தோழி. உன்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்லப்போகிறேன். கேளடி! நேற்றையதினம் அம்பாள் சந்நிதிக்கு சென்று பூஜை முடிந்ததும், அம்பாளை வரம் தரும்படி வருந்தினேன். அம்பாள் எனக்கு வரமளித்ததாவது என்னவெனில் உன்னிடம் ஒரு சுந்தரபுருடன் கனவில் தோன்றி கலவிசெய்து விட்டு செல்வன் என்று தெரிவித்தவண்ணம் சுந்தரபுருடன் என்னுடன் கலவி செய்து மாய்கையாய் சென்றுவிட்டர்னே என் செய்வேன்

(ஆ எந்தன் நாதன் என்ற வர்ணம்)

பல்லவி.

மையல் தாளேனடி மாமயில் மானே

அநுபல்லவி.

வையம் புகழுமர்றன் கையம்பால் வருத்துமுன்

சரணம்.

கோரிய காரியம் கூடுமோ என் சகியே
கொற்றவரும் எனை கட்டி அணைவாரோ

(சித்ர—வசனம்). அம்மா உஷா உனக்கென்ன பயித்தியம்? கனவில் கண்டதெல்லாம் நிஜமாகுமா? நான்கூட நேற்று ஓர் கனவு கண்டேன். நீங்கள் மங்களமாய் திருமணக்கோலத்துடன் இருப்ப தாகக் கனவு கண்டேன் இப்போதுன்னை பார்த்தால் துக்ககோலத் தோடிருக்கிறாய். இதுகளெல்லாம் நம்பாதே தாயே.

(உஷை வசனம்). என்னடி என்னை கேலி செய்கிறாய்.

(சித்ர—வசனம்). இல்லை தாயே உண்மைதான்.

உஷை பாட்டு. (எப்படிதான் தாய்வயிற்றில் என்ற வர்ணம்)

இராகம் தன்யாசி—தாளம் ஆதி.

பல்லவி.

என்ன செய்வேன் இந்த துன்பம் எப்படி சகிப்பேன் தோழி
ஏங்குதே எந்தன் நெஞ்சம்.

அனுபல்லவி.

அன்னவாகனமேறும் அம்பாள் செய்த சூதோ
அறியேனடி எந்தன் அன்புள்ள தோழியே. (என்ன)

சரணம்.

அல்லும் பகலும் தாபம் அவரையே நினைந்திட
தொல்லைமிக தந்தாரடி.
புல்லானாலும் கண்வன் புனிதரவரைவிட்டு
அல்லால் வேறுண்டோ அறைகுவாய் தோழியே (என்ன)

(உஷை வசனம்.) சித்ரரேகா ஒன்று சொல்லுகிறேன் கவனமாய்க் கேள், உன்னால் ஆகாதது ஒன்றுமில்லை, எல்லாம் உன்னால் ஆகக் கூடியதுதான், கண்ணே! எனக்கன்பான தோழியல்லவா நீ.

சித்ரரேகா தரு. (மான்குஜரியகம் என்ற வர்ணம்)

பல்லவி,

மாங்குயில் மானே மரகத தேனே
பாங்கிமார்களின் பலமெல்லாம் வீணே (மாங்)

அனுபல்லவி.

தீங்குவராமல் திகழாய் காப்போமே
ஏங்கி வாடுவது ஏற்குமோ தாயே (மாங்)

(சித்ர வ-ம்.) அம்மா இது பாங்கிமார்கள் சமாதானப்படுத்தும் செய்கையா. தங்களுக்கு தீங்கு வராமற் பாதுகாப்பது தான். எங்களுடைய செய்கை, எல்லா காரியமும் என்னாலேயே முடியுமென்று தெரிவிக்கின்றாயே உம்மைவிட அதிகம் தெரிந்தவளா? எனக்கொன்றும் தெரியாது தாயே.

ஷை உஷை பாட்டு.

ஞாலமதில் உன்னை நம்பினேன் மானே—உன்
மூலமாய் பெண்ணே நான் மோகத்தில் ஆழ்ந்தேன் (ஞா)

ஷை உஷை பாட்டு.

சித்திரரேகா செல்லாதே எங்கேயும்
சித்தம்கலங்கினதின் பித்தம் தெளியச்செய்வாய் (சித்)

சித்ரரேகா பாட்டு.

பேதாதிபேதங்கள் ஏதேனும் நினைந்தால்
தாதியரைக்கண்டு பழித்திடுவர் அம்மா (மாங்)

(உஷை வ-ம்.) அப்படியா சகி இனி அரைக்ஷணம் என்உயிரை வைத்திருக்கமாட்டேன்,

(சித் வ-ம்.) வேண்டாம் வேண்டாம் தாயே, உன்னால் பாணாசுரனிடத்தில் அகப்பட்டுக்கொண்டு மூழிக்கவேண்டும். அம்மா உன் புண்ணியத்திற்கு நான் போனபிறகு உன் உயிரை விட்டுக்கொள்.

(உஷை வ-ம்.) சொல்லடி. இன்னுமா விளையாட்டு.

(சித் வ-ம்) என்ன விளையாட்டு. நான் என்னசொல்லட்டும்.

சித்ரரேகை விருத்தம். பியாக்.

பதினாறு தேசத்தரசர் படங்களை காண்பிப்பேன் யான்
அதினுள்ள உருவத்தில் உந்தன் அன்பன் உண்டாவென்று
நிதியாயுரைப்பாயாகில் பதியையும் அடைவாய்நீயும்
விதியின் வசமானாலும் கதியின் செயலிதுவே.

(சித்-வ-ம்.) எனக்கு தெரிந்தவரையில் பதினாறு தேசத்தரசர்கள் உருவபடங்களை எழுதிக்கொண்டு வருகிறேன். அதில் உன்நாதன் உருவம் தோன்றினால் விதிப்படி மூடிந்துவிடும். நான் போய் வரட்டுமா!

(உஷை வ-ம்,) அப்படியேசெய். உன்னைதான் நம்பியிருக்கிறேன்

## 3-வது சீன்.

(உஷை வ-ம்.) கண்ணகத்தேநின்று களிதருமே காணுங்கால் உண்ணகத்தே நின்ற ஒளி என்றபடி ஆனந்தமான கலவியையறிந்த பின் தானந்தமாகும் என்பதைப்போல் மனமானது எங்கேயோ இழுக்கின்றது, சீக்கிரம் வருகிறேன் என்று சொல்லிவிட்டுப்போன சித்ரரேகா இன்னம் காணும் படத்தையும் ஒன்றுங் காணும் என்ன செய்வேன் நாதா என்னை இப்படி சோதிக்கலாமா?

உஷை பாட்டு, பல்லவி.

என்ன செய்வேன் எவ்வாறுய்வேன்
மன்னனே நான் மையலானேனே (என்ன)

அநுபல்லவி.

கன்னல் மொழியோ பாகோ தேனோ
கண்டின்ரசமோ கனகமொழியோ (என்ன)

சரணம்.

ராஜா முகத்தில் ரோஜாமலரும்
கண்ணில் வந்து கமலம் அலரும்
முத்துபோன்ற பற்களழகும்
முகத்தோடு முத்தமிட்ட அழகும் (என்ன)

(உஷை வ-ம்.) ஆ சித்ரரேகா! சீக்கிறமாய் வருவேனென்றுதெரிவித்து வாராது மோசம்செய்தாயே! ஆ! (மூர்ச்சிப்பது) ஆ சித்ரரேகா வந்துவிட்டனையா! என்ன சங்கதி.

(சித்ர—வ-ம்.) என்ன அவசரம் அம்மா! இப்படியும் அவசரப் படலாமா! (வெகு நன்றாயிருக்கு)இந்தாரும் இந்தமன்னர் படம்தானு

சித்ரரேகா பாட்டு. கானட ஆதிதாளம்,

பல்லவி.

படங்களை நீ பார் தாயே
பார்த்ததுண்டா சொல்வாய் நீயே தாயே (படங்

அநுபல்லவி.

கொங்கணத்துதேச க்ரூர அரசனும்
கோரினதிவரையா கோதையே நீயே (படம்)

உஷை பாட்டு. (பாண்ட் வர்ணம்)

கொங்கண தேசர்க்கு செங்கண் விழியில்லையடி
பொங்குமுகமலர்ச்சி பொருந்தினவ ரில்லையடி
(உஷை வ-ம்) சித்ரரேகா என் நாதன் உருவமில்லையே ! சீ! சீ!

சித்ர—ஷிபாட்டு கானட.

காஷ்மீரதேசத்து கலிங்கன்
பேஷ் யிவர்ரூபம் பெண்களை மயக்குமம்மா (காஷ்)

அநுபல்லவி.

வாஸ்தவமாகவே அறிகுவாய் தாயே
சேஷனென்பதற்கு சாக்ஷி வேறு வேண்டுமோ (கஷ்)

(உஷை வ-ப்). இந்த உருவமா சே. சே.

உஷை பாட்டு. (மலடிவயிற்ற)

தூக்கத்தில் மருவின துரையல்லவே இவர்
நோக்கத்தை கூறவும் சரியல்லவே என்
சோக்கத்தை தீர்ப்பவர் இவரல்லடி என்தோழி

சித்ர—தரு, (ஜோ தூர என்ற மெட்டு)

வங்காளதேசத்து வதனனு சொல்குவீரே
பங்காள பவழமேனி பார்வேந்தனு சொல்வாய் தாயே (வங்)

(உஷை வ—ம்.) சகி எத்தனையோ படங்களை தந்தாய் அவற்றில் என் பிரியநாதன் உருவைப்போல் காணேனே.

(சித்—வ—ம்.) சரி போகட்டும். இந்த படம் தானு பாரும்.

உஷை பாட்டு. (கலிலோ)

பல்லவி.

இவரோ எனக்கிசைந்தவரடி சே
இதர உருவம் போடி—சித்ரரேகா (இவ)

அநுபல்லவி.

இவர் யாரோ எனக்கிணையல்லவே
வதனத்தில் குறையுண்டு--சரியல்லவே (இவ)

(உஷை வ-ம்.) சித்ரரேகா உனக்கென்ன கேலியாயிருக்கிறதா? வயது சென்ற கிழவர்களை காட்டுகிறாயே (ஆ அதுவென்ன மறைக்கிறாய்? எதோ காண்பி பாக்கலாம்.

(சித்ர-வ-ம்). என்ன பயித்தியமா உமக்கு? எதைக் காட்ட.

உஷை பாட்டு—ப்யாக் ஆதி.

பல்லவி.

கரத்திலுள்ள படத்தை காண்பி களிப்படைய (கர)

அநுபல்லவி.

பிரிய சேடியே பெருமை இதுவோ
யேனோ என்னை அலையச்செய்கிறாய் (கர)

சரணம்.

சேடி என்னை பழிக்கவேண்டாம்
சீக்கிறமாய் காண்பி பார்ப்போம்
தப்பாமல் எனது நாதன் ஒப்பவில்லையோ—உன் மனது (கர)

(உஷை வ-ம்) ஆ நாதா! ஆ! ஆ! என்ன அழகு.

(சித்-வ-ம்.) இதென்ன பயித்தியம் கையினால் எழுதின படத்தை வைத்துக்கொண்டு குலாவுகிறீரோ அவர் யார் தெரியுமா? துவாரகை புரிவாசன் ஸ்ரீ க்ருஷ்ணனின் பேரன் மன்மதன் புதல்வன். இவரை அனிருத்ரன் என்று அழைப்பார். அவர் அழகைகூற முடியுமா!

(உஷை வ-ம்.) ஓ! ஓ! இதனால் தான் காட்மாட்டேனென்றாயா!

(சித்ர—வ-ம்,) உங்களுக்கு கொடுத்துவிட்டு நானென்ன செய்கிறது. (படத்தை பிடுங்குதல்)

(உஷை வ-ம்.) தோழிவேண்டாம் கொடுத்துவிடு சோதனை செய்யாதே (படத்தை மறுபடி வாங்கி) உனக்கென்ன கைம்மாறு செய்வது

(சித்ர-வ-ம்,) கைம்மாறும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம்.

உஷை தரு. (மாறன் கணை என்ற வர்ணம்)

பல்லவி.

மதன் [illegible]ளித்தானவுருனடி—அதன்
பாதை பினித் தாளேனே
மதம் பெருகியென் மனமும் சோறுதடி
மாருதம் சீறுதடி (மதன்)

அநுபல்லவி,

பரந்த மார்மழகும் பவளவாயழகும்
பார்வை கண்ணை மயக்குதடி
மதம் பெருகியென் மனமும் சோறுதடி
மாருதம் சீறுதடி (மதன்)

இடையும் சோர எந்தன் நடையுமாறுதடி
இன்றைக்கே நான் காண்பேனோ
மதம் பெருகியென் மனமும் சோறுதடி
மாருதம் சீறுதடி. (மதன்)

(உஷை வ-ம்.) உன்னைவிட எனக்கு வேறு யார் உன்னதம் கூறுவார்கள். அது நான் செய்த பாக்கியம் - கண்ணே எப்படியாவது அன்னவரை வரும்படியான முயற்சி செய்யடி. உன்னைவிட எனக்கார் இருக்கிறார்கள், (ஏன் பதில் சொல்லவில்லையடி,

(சித்ர-வ-ம்.) சரி! சரி! ஆல்மரத்தைப் பிடித்தது அரச மரத்தையும் பிடித்து விடும் போலிருக்கிறது. (நான் வருகிறேனம்மா)

(உஷை-வ-ம்.) சகி! போகவேண்டாம்! (ஆ மூர்ச்சை).

உஷை பாட்டு (சென்று கனிபரித்து)

சுகுமாரனைக் காணாவிடில்
சுருக்கிட்டுக்கொள்வேன் என் உயிரை
சுந்தரன் எந்தனை—சொந்தமாக்காவிடில்

சுயம்வரம் நான் வேண்டேன்
சோறுதுள்ளம் சகியே,

ஷ வர்ணம் சித்ரரேகை தரு.

நானே சென்றவனைக்கொண்டு
சீக்கிரம் வருவேன் அஞ்சாதே

ஏனோ வீணே மனக்கவலைகொண்டாய்
நானே அனிருத்திரனை
விடாமல் கொண்டே வருவேன்.

(சித்—வ-ம்.) உஷா எழுந்திரு. ஒன்றுக்கும் அஞ்சாதே. இதோ அரை நொடியில் அந்த அனிருத்திரனை கொண்டுவந்து உன் முன்னே விடுகிறேன்.

ஆக்ட் 3. காடு. சீன் 1

(சித்ர—வ-ம்.) ஆ! ஆ! நான் கொஞ்சமேனும் யோசியாமல் வந்து விட்டேனே. உஷையிடமும் ஒப்புக்கொண்டேனே. அப்படி அனிருத்திரனை கொண்டு போகாவிட்டால் பிராணனை விட்டுவிடுவாள் போலிருக்கிறது. அவர்களெல்லாம் தேவர்கள் வம்சத்தில் சேர்ந்தவராயிற்றே என்ன செய்வது. பெருங் கஷ்டமாய் முடிந்ததே. துவாரகைக்குப் போவதென்றால் சாமான்யமா? யோசிக்காமல் சொல்லி விட்டேனே (ஓ! ஓ! அதோ நாரதரும் வருகின்றார். அவரை வணங்கினால் எல்லா காரியம் நிறைவேறி விடும்.

(நார வ-ம்.) ஆ இந்த அடவியில் யாரோ ஒரு பெண்பால் வருகிறாப்போல் காண்கிறது. ஓ! ஓ! சிதரரேகை போல் தோணுகிறது. உஷையின் விஷயமாய் தான் வருகிறாள் போல் காண்கிறது. ஆனாலும் அன்னவள் காரியம் ஜெயமடையும்படிக்கு ஒரு மந்திரத்தை ஜெபித்து அனுப்புகிறேன். பாணன் கர்வம் ஒழிவதற்கு இது ஒரு தகுந்த யுக்திதான்

சித்திரரேகா தரு. அரிகாம்போதி சாப்புதாளம்.

பல்லவி.

நாரதமாமுனியே வருவீர் அபயம் சரணம் (நா)

அனுபல்லவி.

பாரெங்கும் திரிந்திடும் பக்தர்தயாளனே
வாக்களித்துவந்த எனக்கு வரமே தருவீர் தருவீர் (நா)

2. உஷையின் நிமித்தியமாய் அனிருத்திரன் தன்னை அந்தரங்கொண்டு போக

அருள்வீர் அருள்வீர் அருள்வீர் (நா

(சித்ர வ-ம்.) முனிவரே பாணாசூரன் புதல்வி உஷையிடம் ஒரு வாக்களித்து வந்துவிட்டேன், அதற்கேற்றவாறு அருள்புரி வீரென நம்புகிறேன் அதுயாதெனில் அனிருத்திரன் என்பவனை எந்த விதமாகிலும் உன் முன்பு கொண்டுவந்து சேர்ப்பேனென்று உருதி மொழி கூறிவிட்டு வந்தேன். வரும் வழியில் உம்மை கண்டு தரிசித்தேன். இனிமேல் பெரியோராகிய தாங்கள்தான் இக்காரியத்தை பூர்த்தி செய்யவேண்டும் சுவாமி.

(நாரதர் வ-ம்.) சரி! நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். நான் ஒரு மந்திரம் உபதேசித்துத் தருகிறேன். அதை உச்சரித்துக்கொண்டே போய் அவன் கோட்டை வாயிலில் ஒன்று போட்டால் அங்கு வாயில் காப்போர்களெல்லாம் மயக்கமாய் விடுவார்கள். அந்தசமயம் நீ உள் சென்று அனிருத்திரனை அப்படியே தூக்கிக்கொண்டு உன் இல்லிடம் சேரு. இதுதான் தகுந்த யுக்தி. சென்று வா (காதில் மந்திர முபதேசம் செய்வது) சென்றுவா.

ஆக்ட் 3. துவாரகை. சீன் 2.

(சித்திரரேகை உட்பிரவேசித்து பிரமித்தல்).

சித்ரரேகை பாட்டு. ஆநந்தபைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

எங்கெங்கு கண்டாலும் மங்களமாகஸ்ரீ
கண்ணன் மகிமை தோணுதே.

அநுபல்லவி.

திண்ணமாய் வீதியை வண்ணமாய் கடந்து நான்
என்னவிதமாய் செல்வேன் என்மனம் நடுங்குது

சரணம்.

காவளாளிகளை கடந்துசெல்லாவிடில்
காரியமதுதன்னை முடிப்பதுஎவ்விதம்

போக கால்கூசுது | புத்திதடுமாறுது
ஏகாமல்தின்றால்நம் | காரியம்கூடாது (என்)

சித்தி-வசனம்.

உயிர்போனாலும் சரி ஒப்புக்கொண்டு வந்ததை நடத்தாதுபோனால் நான் ஒரு பெண்பாலா? சே! எதற்கும் நாரதர் கொடுத்த மந்திரத்தை உபதேசித்தே செல்கின்றேன்.

[அநிருத்தனை காணுதல்.]

சித்ரரேகை வசனம்.

ஆ! ஆ! என்ன சுந்தரம்! என்ன கம்பீரம்! உஷையின் பாக்கியமே பாக்கியம் இப்பேர்ப்பட்ட சுந்தர புருஷனை மணாளனாக அடைய எவ்வளவு தவமிருந்தாலும் கிடைக்காது. (உம்) நல்ல நித்திரையில் இருக்கிறார். இதுதான் சமயம் இன்னவரை மஞ்சத்துடனே தூக்கிச் செல்லலாம்.

சீன் 1. உஷையின் சயன அறை. ஆக்ட் 4.

(கல்லார்க்கும் கற்றவர்க்கும் என்ற வர்ணம்.)

உஷை.

போகிறதாய் சொன்னமாது | போனாளோதான் காண்கிலேனே
வேறெதுவோ வேலைசெய்ய | வீடடைந்து விட்டனளோ
நல்வாக்குசொல்லி என்னை | நட்டாற்றினில் விட்டனளோ
நாயகனை எவ்விதம்நான் | நாடிக் காண்பேன் (போகி)

உஷை வசனம்.

என்ன இதுவரையில் சித்ரரேகா வரவில்லையே. வீட்டில் ஏதாவதுவேலை செய்துக்கொண்டிருக்கின்றனளோ? அல்லது போன இடத்தில் யாராகிலும் தீங்கு புரிந்தனரோ? தெரியவில்லையே ஆ நாதா உம்மை எப்போது காண்பேன்.

சித்ரரேகா வசனம்.

உஷை நமக்காக எதிர் பார்த்திருப்பாள் நாம் சென்றவுடன் அவளுக்கு படத்தை காட்டக்கூடாது அவள் அவசரப்பட்டு அடங்

னவுடன்தான் காட்டவேண்டும் (அம்மா என்ன யோசனை செய்கிறீர்.)

உஷை பாட்டு (பாலாபிஷேக) என்ற வர்ணம்.

என்னடி சேடி சென்ற காரியம்
காயா பழமா எனக்குரைப்பாய்

சித்ரரேகா (ஷெடி வர்ணம்)

என்ன அவசரம் உம்மா உனக்கு
எந்தன் கஷ்டத்தை அறியாமலே
கண்ணன் மாளிகையில் காவலாளிகளிடம்
திண்ணமாய் சிக்காமல் வந்தேனே யான்

உஷை ஷெடி பாட்டு.

என்ன இருந்தாலும் எந்தன் மணாளனை
எங்கு கொண்டுவந்தாய் சேடியே நீ

சித்ரரேகா பாட்டு.

அன்னவரைக்கொண்டு வந்துவிட்டேனம்மா
அவசரப்படாதே நீ சும்மா

உஷை வசனம்.

எங்கேடி என் நாதர் ஏதோ காணோமே

சித்ரரேகா வசனம்.

என்ன அவசரமம்மா உமக்கு இவ்வளவு தூரம்போய் கஷ்டப்பட்டு களைத்து வந்தவளை ஆயாசந்தீர உபசரனை செய்யாமல், உம்முடைய காரியத்தின்பேரிலேயே கருத்தாய் இருக்கிறீர்களே வெகு நன்றாயிருக்கு (என்று சித்ரரேகா நாற்காலியில் சார்ந்து கொள்ளுதல்)

(கேலி செய்வது

(உஷை பிறகு அனிருத்ரனை பார்த்தல்)

உஷை:—பூச்செண்டினால் அடித்தல்)

அனிருத்ரன் வசனம்.

ஆ! இதென்ன நம்முடைய நகரமா இல்லையே நாம் ஏன் இங்கு வந்தோம். என்ன ஆச்சரியம்.

அனிருத்ரன் பாட்டு (பாண்ட் வர்ணம்)

அந்த முள்ள சொந்த மாளிகை
வந்த விதம் : தோனேனே
விந்தையாய்த் தோற்றுது இந்தவிதம் செய்தவர்
எந்தனிட வாளிற் கிறையாக்குவேன்.

அனிருக்திரன் வசனம்.

ஆ ஆ நாம் வசித்த மாளிகையல்லவே! எங்கு பார்த்தாலும் அதிசயமாய் இருக்கின்றது. விசித்திர விசித்திரமாய் விநோதங்கள் காணப்படுகிறது. என்னத்திற்காக என்னை இங்கு வரவழைத்தார்கள்.

ஷை அனிருத்ரன் பாட்டு.

எங்கெங்கு கண்டாலும்சித்திரம் தொங்கு ததிசயம்
பங்கமாகசங்கை யின்றி தங்கத்தினல் உருவம்போலே

அனிருத்ரன் வசனம்.

என்ன கொஞ்சமேனும் மானபிமான மில்லாமல் தங்கப் பதுமைகளும் பிம்பங்களும் நிறைந்திருக்கிறதே! சே! துஷ்டர்களின் சவகாசம் இது தானே.

அனிருத்திரன் ஷை பாண்ட் பாட்டு.

மஞ்சத்துடன் நித்திரையிலென்னை வஞ்சம்செய் கள்வன்
நெஞ்சைபிளந்துநான் அஞ்சாமல் தஞ்சமென்றேவந்தால் காப்பேன்

அனிருத்ரன் வசனம்.

(கண்ணை துடைத்துக்கொண்டு) என்ன ஏதேதோ உளறுகிறேன். கினவோ அல்லது நித்திரை சோக்கமோ! இல்லை! இல்லை! இது யாரோ சூது செய்திருக்கிறார்கள்.

(நானே தருவேன் க்ரீடம்) அனிருத்ரன் பாட்டு (மத்ய மாவதி)

யாதோ அறியேனிந்த அறியாத மாளிகையில்
தெரியாது வந்தவிதம் (யாதோ)

அநுபல்லவி.

சூதோ என்னை செய்ய வேண்டி தோதகமாய் அருமஞ்சத்துடனே
க்ஷணத்திலே சொப்பனத்திலே சொல்லாது செய்தவர் (யாதோ)

அனிருத்ரன் வசனம்.

இந்த சூது செய்தவர் இன்னாரென்று தெரியவில்லை! நான் கண்டால் இப்போதே அவர்கள் பிராணனை வாங்கிவிடுவேன் (ஆ ஒருவரையுங் காணாமே சுற்றி பார்த்தல்)

உஷை தரிசனம்.

வசனம்,

ஏ பெண் மயிலே! யார் சொல்.

(அனிருத்ரனை உஷை மன்னிப்பு கேட்டுதல்)

பல்லவி.

யாரென்று சொல்லுவேன் நானே இவ்வாரணங்கை (யா

அநுபல்லவி.

அனனத்தை பழித்திடும் அழகுள்ள நடையாள்
அவனியை விலைகொள்ளும் அதிசய உடையாள்
நன்மையாய் பாட நாணமும் உடையாள்
நாகரீகமான ஆடையுமுடையாள் (யா)

2. ஊர்வசி ரம்பையும் மகிழும் சீமாட்டி
உத்தமிக்கோர் பிழை சொல்வோன் காமாட்டி
நத்தியே எவர்க்கும் நல்முகம் காட்டி
நாடோர்க்குமேஇது நல்லதோர் பேட்டி

(அனி வ-ம்) ஏபெண்ணே! இவ்விடத்தில் யார் கொண்டுவிடுத்தது சீக்கிரம் சொல்,

உஷை (எமிமாயமு என்றவர்னம்)

பல்லவி.

நாதனே நான் கினவி லும்மை
நாயகனுய் நான் அடைந்தேன் (நா)

அநுபல்லவி.

காதலனே கோபம் வையாதீர்
வேதனையால் வாடுகிறேன் (நாத)

சரணம்.

பெண்பாவம் பொல்லாது பேதை மனம் நில்லாது
பேரின்பவடிவனே பேசாது என்வாது
போக உனக்கினி இடம்தான் இங்கேது
போகமே விட்டது தாளாது தாளாது (நாத)

உஷை வசனம்.

நாதா உம்மை கினவில் காதலித்து நாயகனுய் அடைந்த நங்கையிடம் கோபம் வைக்கலாகுமா?

இராகம்-பிலஹரி .தாளம்- ரூபகம்.

பல்லவி.

ஆரடிமயிலே அச்சமின்றி எடுத்து வந்தனே (யா)

அநுபல்லவி.

வெகு தீரத்துடனே மானமின்றியே பேசத்துணிந்தவன் (யா)

சரணம்.

சரணகதினன உனை அடைந்தேனே
சந்தோஷமாய் காதல் தீர்க்க வந்தேனே
சாமியே இந்த நேமியா னென்னை
சங்கையில்லாமலே சேரவே வருவீர்
சரச சல்லாப உல்லாச நாதா (சர)

அனிருத்திரர் பாட்டு.

அசுரகுலத்தில் உதித்த அனங்கையே
அக்ரமத்தில் புகுந்தாய் நீ இங்கையே
விசுவாசமில்லா பேயே நாயே
வீண்பழி சுமத்தினாய் (யாரடி)

அனிருத்ரன் வசனம்.

ப்ரஷ்டி நீ ராட்சசியா யிருந்தும் நீ இந்தகாரியம் செய்யலாகுமா?

அனிருத்ரன் பாட்டு—பல்லவி.

பாதகி நீ எந்தனை என் கோரினாய்
கோரினாய் கோரினாய்

அநுபல்லவி.

பூதலமேல்பெரும் பாதகமும் விபரீதமுமே வரும் (பா)

சரணம்.

பாதகியே உன்னை பெண்ணானதால்விட்டு
பாதுகார்த்தேன் இனி எந்தனை நாடாதே
நீதுவரும் இனி எந்தனைக் கோரினால்
ஓதினேன் உனக்கே ஓடிப் பிழைப்பாய் ராக்ஷஸ (பா)

அனிருத்ரன் வசனம்,

சண்டாளி! உன் குலத்திற் கேற்ற புருஷனை தேடிக் கல்யாணம் செய்துக்கொள்ளாமல் என்னை மணாளனாய் அடையவா இங்கு எடுத்துக்கொண்டு வந்தாய் உன்னை பெண்ணானதால்தான் விட்டு விட்டேன். ஆணா யிருக்கும் பட்சத்தில் என்னுடைய கட்கத்திற்கு இறையாக்கியிருப்பேன். ஜாக்கிறதை! என்னை என்னுடைய இல்லிடத்திற்கு கொண்டு போ.

உஷை பார்ஸி பாட்டு.

அழகல்லவே அலட்சியம் செய்வது (அழகல்)

ஆ ஆ என் நாதனே அன்பனே உந்தனை
தென்புடன் நம்பினேன் (அழக)

அனிருத்ரன் பாட்டு.

ஆடவருக்கேற்ற அச்சமும் நாணமும்
அணுவளவேனும் இல்லையடி
அடியன்முன் மனமுறு கடிதுயர் அடிபட
ஆட்டியே மையல் வலை பூட்டாதடி
ஆகாது ஆகாது
அறிவையே! நன்ருய் தெளிவுர ஒதினேன்

உஷை:—அழகல்லவே அலட்சியம் செய்வது

உஷை வசனம்.

நாதா நீர் ஆண்பிள்ளையல்லவா! பெண்கள் நேரில்வந்து கலவிபுரியச் சொன்னால் வெறுப்பாய் பேசுவாருமுண்டோ இது சரியல்ல நாதா இனி என் உயிர் கட்டாயம் நீங்கிவிடும்.

உஷை பாட்டு (அன்னமேயுனம் என்ற வர்ணம்.)

ஆதரித்திட வல்ல தருணம் நாதா
அனங்க வுந்தனம் தந்தேன் ப்ரக்யாதா

ஷை அநுபல்லவி.

ஆட்டிமையல் வலை பூட்டுமனுதினம்
போட்டிசெய்யும் வினை யோட்டி அடியாளை (ஆ)

அனிருத்திரன் ஷை பாட்டு.

மாயையில் மனம் புக ஒட்டாதே உந்தன்
வஞ்சனையால் எனை கட்டாதே
ஆயிரம்தண்டம் சொல் தட்டாதே என்னை
அணைந்தால் நலமும் கிட்டாதே அடி(மாயை)

ஷை பாட்டு உஷை.

எங்கெங்குமே உந்தன் உருவமாய்மின்ன
எண்ணம் வேறின்றி உனைமனம் உன்ன
மங்கள செய்திட வாயாலே ஒரு
வார்த்தை சொன்னால் அதுபோதாதோ(எங்)

ஓடி அலையாதே உந்தன்சொல் அற்பம்
உன்னிடம் வாவென்றால் ஒழியாது சந்தர்ப்பம்
தேடி கல்யாணங்கள் செய்வது கஜகர்ப்பம்
தீவினை தேடாதே சிந்தை சங்கர்ப்பம் (மா)

(அன்ன மூண்ணுமலே என்ற வர்ணம்.)

பல்லவி,

வாதுசெய்வதேன்—வீண்
எண்ணங்கொண்டு எந்தன் முன்னே (வாது)

அநுபல்லவி.

எந்தன் குலத்திற்கே தீங்குதந்தது மல்லாமல் (வாது)

சரணம்,

எந்தனை நீ கண்தால் என்னபலன் அடைந்தாய்
ஏனோ நீ வீணே எனை நினைந்து உருகியே (வாது)

பல்லவி.

கினவில் மணர்ந்தேன்—நாதனே உமை நினைந்து
கினவில் மணந்தேன்
நேரினில் காணவே உம்மை இங்கு கொணர்ந்தேன் (கினவில்)

அநுபல்லவி.

உம்மை நேரில்கண்டுமே உகந்துமேவந்தேன் யான்
ஊனுறக்க மில்லாமல் உருகியே நான் வாடினேன் (கின)

அனிருத்ரன் வசனம்.

ஏ பெண்பாவா உனக்கென்ன அற்பபுத்தி! நீ ராட்சசி வம்சத்தை சேர்ந்தவ ளல்லவா. நீ என்னை கோரினால் முடியக்கூடிய காரியமா! வேண்டாம் நான் சொல்வதைக் கவனி.

உஷை வசனம்.

நாதா நான் கினவில் உம்மை கண்டு அடைந்த சந்தோஷ முதற் கொண்டு நாளுக்கு நாள் என் தேகம் மெலிந்து தளர்ந்து வியா

கூல மடைந்திருந்தது. இப்போது தங்களை நேரில் கண்டதினுல் என் உள்ளம் புரிப்படைந்தது நாதா ஒன்றும் யோசனை வேண்டாம்.

அநுருத்திரன் வசனம்.

இராட்சதப் பதரே! க்ஷத்திரிய வம்சத்திற்கும் ராக்ஷச வம்சத்திற்கும் வித்யாசமில்லையா என்னை வீணை அழைத்துவந்து உன் வம்சத்திற்கு என்னை விருந்து வைக்கப்போகிருயா என்ன.

உஷை வசனம்.

உனக்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்று சொல்லுகிறீரே உன் பாட்டான் கிருஷ்ணன் எந்த வம்சத்தாரை சேர்ந்தவர். ருக்குமணி எந்த வம்சத்தை சேர்ந்தவள், அர்ச்சுனன் எதைச்சார்ந்தவன். சுபத்திரை எதை சார்ந்தவள். இதுகளை நன்ருய் யோசித்து பாரும்.

அனிருத்திரன் வசனம் (தனியாய்)

நாம் எவ்வளவுசொல்லியும் கேட்கமாட்டேனென்கிருள் இதோடு நமது வம்சத்தின் முறைகளை யெல்லாம் எடுத்தோதுகிருள், இனி நாம் வெருத்தால் நமது மானத்தை வாங்கிவிடுவாள்போல் தோணுகிறது, கூடியவரையில் ராட்சசியாய் இருந்தாலும் பெணகளுக்குரிய லட்சணங்கள் அமைந்திருக்கிறது. இனி அவள் பிரியப்படி இசைவதே சரி.

(உஷை பின்புறமாய்வந்து கண்களை மூடல்)

அனிருத்ரன் பாட்டு) வேண்டினேன் சையோ)

நானுசையாலே மனம் வாடினேன் உன்மேலே
செந்தேனுதவும் பூஞ்சோலை
மடமானென வேண்டுமேலீலை
தரதோணுகிருய் ரதிபோலே (அடிநா)

ஈடொருராஜ குமாரனும்நானடி
மோடிஎன்னேடு சும்மாய்நீவனடி
இன்நாடறியும் கல்யாணம்உன்னேடு
செய்யும்பிரமாணம்இனிநான் செய்வேன்என்னநாணம் (நா)

---

# பாணன் தர்பார்.

ஆக்ட் 4. பூஞ்சோலை சீன் 2.

சேடி பாட்டு (பட்டபாடெல்லாம்)

உற்றதை சொல்லுவேன் பெற்றவரே கேளும்
உம் புதல்வி துஷ்டத்தனம்
பெற்றவரிஷ்டம் இல்லாமல் ஒருவனை
கொற்றவனுக்கிக் கொண்டாள் அரசே
கொற்றவனுக்கிக் கொண்டாள்

ஷை பாட்டு.

இத்தனை தினமாக என்னமோவென்று
எங்கியே விழித்திருந்தோம்
எங்களையும் அறியாமலேஎவனோ
ஏகினன் உஷையினிடம்

சேடி வசனம்.

அரசே! தங்களுடைய உத்தரவு பிரகாரம் தமது செல்வப் புதல்வி உஷையை எவ்வளவோ ஜாக்கிறதையாய் இராத்திரி பகலாய் இமை கொட்டாமல் கண் விழித்து காப்பாற்றி வந்தோம். அப்படி யிருந்தும் எங்களை யறியாமல் எவனோ ஒரு யௌவன புருஷன் நமது உஷையினிடம் கூடிக் குலாவிக்கொண்டிருக்கிறான். அவனை யாரென்று கேட்கவும் உமது புதல்வி இடங்கொடுக்கமாட்டேன் என்கிறாள் நாங்கள் என்ன செய்வோம் உம்மிடம் தெரிவிக்க வந்தோம்.

பாணன் வசனம்.

அப்படியா யார் அவன் எந்த சண்டாளன்.

(அதிக சுரதனல என்ற வர்ணம்)

பல்லவி.

நானும் இவ்விடமே தனியாய் வந்தானு
நவிலுவாய் சேடியே

அநுபல்லவி.

நங்கைஉஷையும் அவள் நாயகனுய் கொண்டாளா
ஆகட்டும்ஆகட்டும் அவள் ஆங்காரத்தை அடக்குறேன் (நா)

---

ஆக்ட் 4.] பூஞ்சோலை. [சீன் 3.

(மோகம் பொல்லாது என்ற வர்ணம்)

பல்லவி.

எனக்கோர் முத்தம் தருவீர் நாதா வாதா நீர் (எனக்)

அநுபல்லவி.

நாதா எனதுபிரிய நாதா சமயமிப்-போதா
சரசமாய் விநோதா உரைத்திட-லாகாதா
இது சமயம் (எனக்கோர்)

ஷை வர்ணம் அனிருத்ரன்.

பல்லவி,

மானே மகிழ்ந்தே தருவேன் தேனே நானே அடி (மா)

அநுபல்லவி.

மானே மகிழ்வுடனே நானே மங்களமாய் தானே
மாதுமலை தேனே ரசமிகும் செந்தேனே உந்தனுக்கே (மா)

(இருவரும் முத்தம் கொடுக்கும் சமயம் பாணன் காணல்.) } திரைதியாநு

இவன் தானு இவ்விடம் துணிந்து வந்தவன் (இ)

அனிருத்ரன் பாட்டு.

மாமா உந்தன் மருமகன் நானே
மன்னிப்பீர் என்னை மனமகிழ்வுடனே

பாணன் தர்க்கம்.

மாமா நீ என்றதால் மன்னிப்ப தேதடா
மடையனே உனக்குதான் மதிஎங்கே போச்சுதடா (இ)

டைலாக்வர்னம்.

உன்னைநான் விடுவதில்லை உருதியாய் எண்ணு
உண்மையாகச் சொல்லுகின்றேன் எந்தன் கஷ்டமே
ஆகாதிது ஆகாதிது
ஆகாதென்றால் இப்படி செய்வது ஞாயமோ
ஆதலாலே செய் பர்வத்தாலே
மானமில்லாத மடையா இங்கு வந்ததேன்
நித்திரையில் எந்தனையும் கொண்டு வந்தாரே
விடேனுன்னை விடேனுன்னை
நீதிதானோ மாமா இந்த பூதலம் தன்னில்
கொல்வேனுனை தாளேனிமை

பாணன் வசனம்.

அடேய்! என் மாளிகையில் புகுந்து என் புதல்வியை அழித்தது மல்லாமல் என்னையும் மாமாவென்று அழைக்குறாய் சண்டாளா இதோ பார் என் கத்திக்கு இரையாக்குகிறேன்.

உஷை பாட்டு சஹானாராகம்.

(பாலனிறந்த பிடம் என்ற வர்ணம்.)

பல்லவி,

அப்பா அவரை நீர் ஒன்றுமே செய்யாதீர்
அடியாளால் நேர்ந்ததுன்பமே என் அப்பாவே
அடியாளால் நேர்ந்தமே

அநுபல்லவி.

அம்புவிதன்னிலே அடக்கமே பெரிதப்பா
ஆராத வெஞ்சினம் அவித்தலே அரிதப்பா (அம்)

சரணம்.

மாய வல்லமையாலே இன்னவர் தன்னையே
மஞ்சத்துடன் கொணர்ந்தேன் என் அப்பாவே (மஞ்)

நேயமானேனினி நொய்வதில் பலனில்லை
காளியம்மன் வரத்தால் கணவனும் அடைந்தேன் (அ)

பாணன் பாட்டு அடாணாராகம்.

சீச்சீ எந்தன்குலத்தை கெடுப்பதற்கு வந்த கொடூரமான பேயே
உன்னைகொன்றாலும் எந்தனுக்கு கோடி புண்ணியமுண்டு (சீ)

அநுபல்லவி

ஏதுஉனக்குஇப்போது அறிவுயில்லாதுஎனக்கு எடுத்தோது
இப்போதுநீ சூது அறிந்தபோது தீது விடுப்பதேது
ஓதும்படி துரைகள் ஒப்புவது ஏது ஏது சீ
உன்னை பெற்றுவளர்த்தவர் பெருமையை முற்றிலும்கெடுத்து
எந்தனை வெறுத்து
உள்ளதை முடித்து அடுத்து அடுத்துநீ அதையே பேசினாலும்
ஆங்காரம்போக்கவேண்டி அடைப்பேன் சிறையில்உன்னை (சீ)

பாணன் வசனம்.

சண்டாளி எனக்கொரு பெண்ணாய் பிறந்து என் குலத்தை கெடுக்க வந்த கோடாலிக் காம்பாய் உதித்தாய் என் முன் நிற்காதே ஓடிப்போ (அந்த நரனைவிடப்போகிறதில்லை பேய்சண்டாளா இன்னு மா இங்கு நிற்கின்றாய் (வாளினால் வீசப்போவது)

உஷை அப்பா அப்பா வேண்டாம் வேண்டாம்.

உஷை பாட்டு.

சுத்தப்ரம்ம பராத்பராராம் என்ற வர்ணம்.

தெரியாமல் செய்த குற்றத்தை தாங்கள்
சரியாய் பொறுப்பது பெரியோர் கடமை

பா] தாணியில்செய்யத் தகாத காரியத்தை
தந்தை யரியாமல் செய்த படுபாவி

உஷை இனிஎன்ன செய்வது என்முகம் பாரீர்
வினையின் செயல்போல் விளைந்ததுதானே

பா] இக்காரியம் பொல்லாதென்றறியாயா
மிக்க கெட்டிக்காரிபோல் கற்றதை பேசுறாய்

பாணன் வசனம்.

அடே! யாரடா மல்லர்காள் இவனை சிறையில் அடையுங்கள்.

மல்லர்கள் பாட்டு (கழுகுமலை என்ற வாணம்.)

ராசூரு எலனகோ படுசுமீக
சேஸேரு ஏமிகோபம் செப்பராது
சூஸேறு வாணிமுகம் சுந்ரபிம்பம
சேஸனு யேமிபாபம் செப்பராது (ரா)

மல்லர்கள் வசனம்.

உரேய் நடுசு நடுசு, ஏமன்டி ஒய் கௌவுதாவு ஏமி, நடுசு, கொட்ராவிட்னி.

அனிருத்ரன் வசனம்

ஆ அய்யோ தெய்வமே இதுவும் தலைவிதியோ

அனி பாட்டு.

ஊருக்கெல்லாம் ஏச்சா பெண்ணே இது
ஆறுக்கும் ஒரு பேச்சா

தொகையறு.

வந்ததெனக் கிந்தகதி எந்தமுகமிருந்து நான்
உன் பந்தமும் கிளிசேர் வசனமும்
வந்துவந்து பலகால் வாட்டலால் பெண்ணே இது (ஊ)

அனி-வசனம்.

ஆ காதலி எப்போது உனை காணப் போகிறேன்

உஷை வசனம்,

ஆ நாதா அய்யோ.

(மானே உன்னாசையாலே என்ற வர்ணம்)

மங்கையேமனம் தாளாது வாடுரேனே
அங்கமது சோறுதடி பைங்கிளியே என்செய்வேண்டி
இங்குமிற்ககூடலை மதனல் மதனல் மதனல் (ம)

தித்திக்கும் செங்கரும்பே தேனேஎனே விரும்பே
சத்தியமாய் நான்உனை மறவேன் மறவேன் மறவேன் (ம)

(தந்திடுவீர் என்ற வர்ணம்.)

அநி—சென்று வாரேன்

உஷை—யாது செய்குவேன

அநி—தயங்காதே மானே

உஷை—திகட்டாது தேனே

அநி—எவ்விதம் செல்வேன்

உஷை—நான் எவ்வாறய்வேன்

அநி—அஞ்சாதே அஞ்சாதே

உஷை—ஆனுலினி தாளேன் நானே அறிவையும் தானே.

(நவதுள சீதள)

காப்பவர் ஒருவரில்லை கதி இதுவோ (கா)

முன்செய்த தீவினையோ மூண்டுதோ இப்பிறப்பில்
என்செய்வேன் இக்கதிக்கே இன்றே முடிந்ததோ (கா)

கண்ணு இதுசமயம் கருணை என்மேல்வைத்து
கார்க்கவொண்ணுதா கருட வாகனமேறி (கா)

வசனம்.

பாவியாகிய நான் கேட்காமல் நிராகரித்து உம்மை இக்கதிக்கு ஆளாக்கினேனே உமது உற்ரூர் பெற்ரூர் கேள்வியுற்ருல் என்ன கவலைப்படுவாரோ ஏ அம்பா நீ கொடுத்த வரம் பொய்த்ததே ஆ இனி என் பிராணனை வைத்திருக்கமாட்டேன்.

அசரீரி வாக்கு

பெண்ணே ஏன் கவலைப்படுகிருய் கூடிய சீக்கிரத்தில் அன்னையே உன் தாய் தந்தையர் அரிய அவனை மணுளனுக அடையப் போகிருய் பயப்படாதே.

மல்லர்கள் வசனம்.

எமிராவீடு எமி சொப்தாடு மொண மொணண்டாடுரா ஓசடி வேய்ரா.

அனிருத்ரன் வசனம்.

ஐயோ! இது என்ன ப்ராப்த கர்மம்

(பாட்டு பக்திபணி.)

பல்லவி.

எந்தவிதம் அறியப்போறார் எந்தனது பாட்டன் கிருஷ்ணன்

அநுபல்லவி.

பந்தமில்லாமலே என்னை இந்த கதியாக்கினர் (என்)

சரணம்,

அந்தரங்கமாக என்னை அழைத்துவந்து இங்கு
சொந்தமாக்கி கொண்டதல்லால் நிந்தனைக்காளானேன்
எந்தனது விதிவசத்தால் இந்தகதி வந்ததன்றி
சிந்தனைசெய்வதிலினி ஒன்றும் பலனில்லை ஐயோ (என்)

அனிருத்ர-வசனம்.

எனது பாட்டனுக்கு யார் தெரிவிக்க போகின்றார்களோ தெரியவில்லையே வீணில் நான் நிந்தனைக்காளாகினேனே தெய்வமே.

[கிருஷ்ண பரமாத்மா ராதா ருக்மணியோடு ஊஞ்சலாடுதல்.]

சத்யபாமா உன்னை நானே
சரசம்செய்ய வேளை தானே
என்னருமை ருக்மணியே உந்தனுக்கீடாமோ மானே (பா)

கிருஷ்ணன்] நன்னாரிஞ்சி—என்ற வர்ணம்.

பல்லவி.

கோபமேனோதானே கோகிலமே (கோ)

அநுபல்லவி.

தாபமேனோதேனே-மானே
தயையேபுரிகுவாய் தாளேன் நானே
ஏனோ வீணே. (கோ)

சரணம்.

உள்ளொன்றும் ஒளிக்காமல் மானே
உண்மையை புகல்வேனே
எள்ளுக்குள் எண்ணைபோலே-நாமே
இருந்து பொய்தானே வங்கலானேன் நானே மானே (கோ)

(ஷை சத்யபாமா பாட்டு.)

காரியமே கூடுமட்டும் கைவசமாவேன் என்பீர் (கா)
தேறுதல்சொல்லி பெண்களைமயக்கி திருடர்போலே ஓடிஒளிப்பீர்

நாரதர் பாட்டு.

நாத விந்து கலாதி நமோ நமோ
வேத மந்ர சொரூபா நமோ நமோ
ஞானபண்டித சாமி நமோ நமோ-வெகுகோடி

(ஓம் கஜமுக)

பல்லவி க்ருஷ்ணன் பாட்டு (கல்யாணி ராகம் தாளம் ரூபகம்.)

நாரதரே என்னசேதி நானிலம் சுகமா
பாரிலுள்ள பக்தர்களும் பரம சவுக்யம்தானு(நார)

நாரதர் ஷை பாட்டு.

பரமாத்மா உந்தன் பவுத்ரன் பாணனிடம் சிக்கியே
பரம கஷ்டங்கள் தன்னை படுகிறுன் ஜெயில் தன்னில்(பா)

நாரதர் வசனம்.

கிருஷ்ணபரமாத்மா உன்னுடைய பவுத்ரன் அநிருத்ரனை பாணு சூரன் சிறையில் வைத்திருக்கிறுன் அதை கவனிக்காமல் பக்தரை விசாரிக்க வருகின்றீரே நன்றுயிருக்கு.

கிருஷ்ணன் வசனம்.

என்ன நாரதரே வாஸ்தவம்தானு என் பவுத்திரனையா ஜெயிலி லடைத்தான்.

மோகனம் விருத்தம்.

இன்னாரென்று அரியான்போலும் எந்தனது பவுத்திரனை
சொன்னால் விட்டுவிடானு சோர்வுகொள்வதேன் நாரதரே
என்னளாச்சோ அரியேன் யேதுகஷ்டமடைந்தான் மைந்தன்
கண்ணால் காண்பதெப்போ கழறுவீர் நாரதரே.

கிருஷ்ணன் வசனம்.

நாரதரே தாங்கள் திரிலோக சஞ்சாரியா யிருந்தும் தங்களுக்கு தெரியாமல் போய்விட்டதா என்னுடைய பவுத்திரனென்று சொன்னால் விட்டுவிடானு பாணன். சரி இனி அவனை வீணில் விடக் கூடாது இதோ போய் விடுவித்துக்கொள்ளுகிறேன்.

நாரதர் வசனம்.

அவனு நமது சொல்லை கேட்கப்பட்டவன் கிருஷ்ண பரமாத்மா நீர் சென்றால்தான் அக்காரியம் கைகூடும்.

கிருஷ்ணன் பாட்டு (மலைக்குமலைகள்) என்ற வர்ணம்.

பல்லவி

காலமிப்படி வாய்க்குமா கண்ணனிருந்தும் (கா)

அநுபல்லவி,

காராக்ரகம் அடைக்க கண்ணன் கண்ணாலே பார்க்க (கால)

சரணம்.

(1) கட்டுக்கிணங்கி இருக்க உன்கதி
கவலையில் உந்தன் மனது நொந்து நொந்து (கால)

(2) சட்டத்திற்கு விரோதமாகவே
மட்டித்தனமாய் அடைத்தவனெவனோ (கால)

கிருஷ்ணன் வசனம்.

அய்யோ குழந்தாய் அனிருத்ரா உன்னை காராக்ரகத்தில் அடைக்கவும் நான் காணவும் ஆச்சுதே ஐயோ உன்கதி இப்படி முடிந்ததா

(கிருஷ்ணன் பாணசூரன் நகருக்கு செல்லுதல்.)

———

இடம் சோணிதபுரம். சிவபெருமான் காவல். வேளை காலே.

கிருஷ்ணன் வசனம்.

ஓ ஓ தாங்களா இங்கிருக்கிறீர். கடைசியில் காவல் காக்கவா வந்துவிட்டீர்.

(சிவன் வசனம்.) நான் பாணனுக்கு வாக்களித்தேன் அது யாதெனில்.

சிவன் விருத்தம் (கேதார கௌளம்)

கைலாயம் எரியும்படி கனத்ததோர் தவத்தை செய்தான்
வகையிலாமலே நானும் வரமது அளித்தேன் கிருஷ்ணா
வைராக்யமாக என்னை வம்புக்கிழுத்த தன்றி
கையினில் சூலமேந்தி காவலும் காக்கவைத்தான்.

(பிரமாதி மெட்டு)

சாவேரி கிருஷ்ணன் பாட்டு.

நீ தந்ததோர் வரத்தினாலே வந்ததோ காவல்கார்க்க
சொந்தமோ பாணனுக்கு விந்தையாய் தோற்றுதய்யா
அந்தமாய் உந்தன்மைந்தன் கந்தனை அனுப்பணுதோ
வந்தவார் வரத்தைநீயும் தந்தையோ நீகைலைவாசா

கிருஷ்ணன் வசனம்,

சிவபெருமானே நீர் தந்த வரத்தை அழிக்க ஏன் என்னிடத்தில் அனுப்பக்கூடாது, உன் மைந்தன் கந்தனை அனுப்பக்கூடாதா.

தங்யாசி-கிருஷ்ணன்-பாட்டு.

(எப்படிதான் தாய் வயிற்றில் என்ற மெட்டு.)

பல்லவி.

கைலாசவாசரே நீ காவலிருப்பதால் காரியமாவதெப்படி

அநுபல்லவி.

வையாபுரியப உன்னை நொய்யாமல் போர்புரிந்து
அய்யா அசுரனைநான் மெய்யாய் ஜெயிப்பதற்கு(கை

கிருஷ்ணன் வசனம்.

சிவபெருமானே இபபோது உம்மை ஜெயித்து பாணனிடம் போர்புரிந்து பவுத்திரன் அனிருத்ரனை விடுவித்துக்கொள்ள போகி றேன் என்ன சொல்லுகிறீர்.

ஷ பாட்டு சிவபெருமான்.

பல்லவி.

காவலைகடந்து போர்புரிவதற்கு காரணம் தெரிந்துகொள்வீர்

அநுபல்லவி.

ஏவலாளியைப்போல் இருக்கும் எந்தனைநீர்
எவ்விதமாகிலும் மூர்ச்சிக்கச்செய்து ஏகுவீர் கோட்டையினுள்

சிவன் வசனம்.

கிருஷ்ணா நான் உன்னை கோட்டைவாயினுள் விடுவது சரியல்ல ஆகையால் எவ்விதமாகவாவது என்னை மூர்ச்சிக்கசெய்து பிற்பாடு கோட்டையில் புகுந்து பாணனிடம் போர்செய்.

கிருஷ்ணன் வசனம்.

அப்படியே இதோ விட்டேன் மோகனாஸ்த்ரம் தாங்கிக்கொள்.

(சிவன் மூர்ச்சை)

(மணி யோசை ரணபேரிகை முழங்குதல்)

---

டர்னிங் சீன். கோட்டை.

பாணன் வசனம்.

அடே யாரடா போருக்கு வந்தவன் கில்லடா ஒரு கை பார்ப் போம்.

கிருஷ்ணன் வசனம்.

என்னவித காரணத்தால் எந்தனது பவுத்திரனை
சின்னத்தனம் செய்தானென்று சிறையினில் அடைத்தாய் அடா
நல்லத்தனமாக இப்போ நயந்து நீ விட்டாலாச்சு
அல்லாமல் போனால் உன்னை அனர்த்தங்கள் செய்வேன் பாணா

பாணன் வசனம்.

அடே இடையா சண்டை செய்ய வந்தாயா அல்லது நாடு நகரம் வளப்பத்தை கேட்க வந்தனையா ?

பாணன் விருத்தம் மோகனம்.

கானகம் தன்னில் நீயும் கன்று மாடு மேய்யபதுபோல்
பாணனிடம் பயமுறுத்த பயலே நீ வந்தாயோடா
கோலது கையில்கொண்டு கோகுலத்தை சுற்றி நீயும்
மாடு கன்று மேய்க்க போடா மதியில்லா இடையா நீதான்

பாணன் வசனம்.

இடையன் காட்டில் திரிந்து கன்றுகளை மேய்ப்பவன் என்னையா பயமுறுத்த வந்தாய் சரி உன் வீரத்தன்மையை காட்டு பார்ப்போம்.

கிருஷ்ணன் பாட்டு அடாணு.

பல்லவி.

எதிர்ப்பாயடா பாணு — எந்தன் முன்
எதிரிடும் தலைதனை — பகரிதோ கொய்கிறேன் (எதி)

அநுபல்லவி.

படபடவென உன்னை — பதைக்கச் செய்கிறேன்
அதிவிரைவுடன் உன்னை — பரலோகம் சேர்க்கிறேன்

சரணம்.

வல்லமைக்காரனென்று — வா இடக்காய் பேசவந்தாய்
வார்த்தையும் பலிக்காது — வாகா எந்தனின் முன்னே
எண்டிசையின் ஆவி — இழக்குராய் எந்தன்முன்னே
எண்ணுமலே மனம் — துள்ளாமலே அடா (எதி)

கிருஷ்ணன் வசனம்.

அடே பாணு இப்போதாகிலும் விட்டு விடுகிறாயா இல்லையா ? இல்லாமற்போனுல் நீ படும் பாடு பார்.

பாணன் பாட்டு

மோகன ராகம் தாளம் சாப்பு.

பல்லவி

அட இடையா அட மடையா
எந்தன் தலையையா கொய்குவாய் மானமில்லாமடையா

அநுபல்லவி.

மடமடவென உந்தன் எலும்பைகான் முறிக்குரேன்
தடதடவென எந்தன் பாணத்தை பொழிகிறேன் (இ)

சரணம்.

இடையா உன்கர்வத்தை இப்போதே அடக்குறேன்
தடியா உன் ஆங்கர்ரம் தப்பாது காட்டுரேன்
விடயாஉனை ஜெயித்தாலும் பேர் எனக்கேது
அடடாமடயா இந்த அம்புமே தப்பாது (மட)

பாணன் வசனம்.

நீ இடையன் என்னிடம் போர்புரியத் தகுந்தவனு! போடா வெளியில் போய்விடு.

(கிருஷ்ணன் தரு.)

எதடா பாணசூரா நீயாது கர்வங் கொண்டாய்
யாது கர்வங் கொண்டாய் நீயாது கர்வங்கொண்டாய்

நீசராக்தனே இன்று நீ வருதல் நன்றோ
மோசமாவாய் சொன்னேனினி நாசகாலபோடா (எத)

பாணன் பாட்டு.

துவாரகைக் கதிபனென்று தானே கர்வங்கொண்டாய்
பேடிபோலே நின்றாய்

வீணே என்முன் சாகவோ விரைந்து என்முன் வந்தாய்
வீணனே நீ ஓடிப்போடா விட்டேன் பாணம் பாராய் (எத)

கிருஷ்ணன் பாட்டு.

கெடிகண்டு துரத்துராகு கேதுவும் அஞ்சாரா
வீரம் நேரில் பாராய்

பொடிகண்டு போகு அந்தப் நீசராக்கதனே
அடிகொண்டு ஓடிபோவாய் எந்தன் முன்னே நேராய்

பாணன் பாட்டு.

மடையனே இடையா நீயும் மாடுமேய்க்க போடா
கோல்பிடித்த கையால் நீயும் வில்பிடிக்க போமோ
கோலாகலம் செய்துமே நான் கொல்லுவேன் நீ போடா

கிருஷ்ணன்-(என்னடா மெத்த) என்ற வர்ணம்,

தோடி ராகம். பல்லவி.

சிரசை கொண்டுபோகவே பாணு எந்தன்
சித்தத்தில் எண்ணினல் எத்தனை மாத்திரம் (சிர)

அநுபல்லவி.

பித்தனைப்போலே நீ பிதற்றுராய் என்னிடம்
உன்சக்தியை கொண்டுபோக சக்கரத்தை எடுப்பேன் பார் (சிர)

சரணம்,

பாணனை சிவபெருமான் பிடித்துக்கொள்ளல்.

(சிவ—வ-ம்) பாணு என் வீணில் யுத்தம் புரிகிருய் உன் குமாரத்தி உஷை ஒருவனை கந்தர்வ விவாகம் செய்துக்கொண்டாள். அவாள் இருவரையும் சதிபதியாக்கு. வீணில் என் யுத்தத்தில் தோல்வியடைகிருய்.

பாணன் வசனம்.

சிவபெருமானே தங்கள் வரத்தின் மகிமை இவ்வளவுதானு?

சிவபெருமான் வசனம்.

எவனும் ஜெயிக்க முடியாதென்று வரமளித்தேனே ஒழிய துவாரகாபுரிவாசனையுமா சேர்த்து சொன்னேன். நடக்கவேண்டிய விஷயத்தை கவனி.

நாரதர் வசனம்.

பரமாத்மா வீணில் யுத்தம் செய்வதில் பிரயோஜனமில்லை நடந்த காரியத்தை வெளியிடாமல் விவாகம் முடித்தலே நன்று.

நாரதர் அனிருத்ரனை அழைத்து வந்து உஷைக்குத் திருமணம் முடித்தல்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

